# மின்னூல் வெளியீடு

*மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com*

*அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com*

*மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com*

*மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation*

# Ebook Publication

*Ebook Publisher: http://freetamilebooks.com*

*Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com*

*Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com*

*Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation*

*பதிவிறக்கம் செய்ய - http://freetamilebooks.com/ebooks/sdot$_o$rigin*

*This Book was produced using LaTeX + Pandoc*

# பொருளடக்கம்

# 1. ஸ்லேஷ்டாட் ஒரு அறிமுகம்

ஒரு காலத்தில் இணையத்தின் செல்வாக்கு மிக்க இணையதளங்களில் ஒன்றாக ஸ்லேஷ்டாட் இருந்தது. ஆனால், இப்போது இணையத்தின் நூறு முன்னணி தளங்களின் பட்டியலில் கூட இடம்பெறவில்லை. இருப்பினும், ஒரு காலத்தில் கோலோச்சி பின்னர் சரிவைச்சந்தித்த இணையதளங்களில் ஒன்று என ஸ்லேஷ்டாட்டை அலட்சியம் செய்வதற்கில்லை. ஏனெனில் ஸ்லேஷ்டாட் இணைய வரலாற்றில் மைல்கல்லாக அமைந்த தளங்களில் ஒன்று.

ஸ்லேஷ்டாட் வெறும் இணையதளம் மட்டும் அல்ல: அது ஒரு மாபெரும் இணைய சமூகமாக விளங்கியது. இன்றளவும் தொடர்ந்து இயங்குகிறது என்பதோடு, இதன் தாக்கத்தை இணையத்தின் பல இடங்களில் இன்னுமும் பார்க்கலாம். இந்த காரணங்களினால் ஸ்லாஷ்டாட் முன்னோடி இணையதளமாகவும், ஒரு இணைய நிகழ்வாகவும் அறியப்படுகிறது.

இணையத்தில், சமூக செய்தி எனப்படும் புதிய பிரிவு உதயமாகவும் ஸ்லேஷ்டாட் அடித்தளமாக அமைந்தது. செய்திகளை பகிரும் ஆற்றல் சமூகமயமானதை இது குறிக்கிறது. இன்று, இணையத்தின் அடையாளமாக கருதப்படும் பல அம்சங்களுக்கான துவக்கப்புள்ளியாகவும் இது அமைந்தது.

ஒரு விதத்தில் பார்க்கப்போனால், வலைப்பதிவுகள், சமூக வலைப்பின்னல் சேவைகள் போன்றவற்றுக்கு எல்லாம் ஸ்லேஷ்டாட் தான் முன்னோடி. இணையத்தில் பயனாளிகளின் குரல் கூட்டாக ஒலிக்கும் தன்மைக்கும் இந்த சேவையே மூலமாக அமைகிறது.

அது மட்டும் அல்ல, ஸ்லேஷ்டாட் உச்சத்தில் இருந்த காலத்தில் இணையத்தின் பேசு பொருளை தீர்மானிக்க கூடிய தளமாகவும் விளங்கியது. ஸ்லேஷ்டாட் தளத்தால் சுட்டிக்காட்டப்படுவது என்பது இணைய சமூகத்தால் அடையாளம் காணப்படுவதாக கருதி கொண்டாடப்பட்டது. முகம் தெரியாத தளங்களை எல்லாம் ஸ்லேஷ்டாட் முன்னணிக்கு கொண்டு வந்திருக்கிறது.

எல்லாவற்றுக்கும் மேல், ஸ்லேஷ்டாட்டில் பயணர்களால் பகிரப்பட்ட கருத்துகள் மூலம் நடைபெற்ற விவாதம் அர்த்தம் மிக்கதாக விளங்கியதோடு, பல தலைப்புகளில் மேம்பட்ட புரிதலுக்கும் வழி வகுத்தது.

அது மட்டும் அல்ல, இணைய வளர்ச்சியில் இரண்டாம் அலையாக உருவான பயணர்கள் பங்கேற்பை ஊக்குவித்த, 'வலை 2.0' வகை தளங்களுக்கான முன்னோடி தளங்களில் ஒன்றாகவும் அமைகிறது.

இந்த பெருமைகள் எதுவுமே ஸ்லேஷ்டாட்டிற்கு மட்டுமே உரியது அல்ல. அதன் சமூக தன்மையும், விவாத களமும் இணைய குழுக்கள் மற்றும் தகவல் பலகைகளின் தொடர்ச்சியாகவே விளங்குகின்றன. அதோடு, ஸ்லேஷ்டாட் சாத்தியமாக்கிய அம்சங்களை இன்று பல்வேறு தளங்களும் முன்னெடுத்து செயல்படுத்தியிருக்கின்றன.

இந்த காரணங்களுக்காகவே ஸ்லேஷ்டாட்டை பொருட்படுத்த வேண்டியிருக்கிறது. ஸ்லேஷ்டாட்டை அறிந்து கொள்வது என்பது, இணையத்தின் முக்கிய தன்மையை அறிந்து கொள்வதாகும்.

## 2. ஸ்லேஷ்டாட் உருவான கதை

1997 ம் ஆண்டு அக்டோபர் மாதம், ராப் மால்டா எனும் 21 வயது கல்லூரி மாணவர், ஜெப் பேட்ஸ் எனும் சக மாணவருடன் இணைந்து, ஸ்லேஷ்டாட் (Slashdot.org) இணையதளத்தை துவக்கினார். டைஸ் ஹோல்டிங் எனும் நிறுவனம், இந்த தளத்திற்கான தொழில்நுட்ப உட்கட்டமைப்புக்கு தேவையான நிதி உதவியை அளித்தது.

அமெரிக்காவின் மிக்சிகன் மாகாணத்தின் ஹாலண்டில் அமைந்திருந்த ஹோப் கல்லூரியில் கம்ப்யூட்டர் அறிவியல் படித்துக்கொண்டிருந்த மால்டா தொழில்நுட்ப விஷயங்களில், குறிப்பாக ஓபன் சோர்ஸ் மென்பொருளில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். பி.பி.எஸ் எனும் இணைய தகவல் பலகை சேவை மற்றும் புராதண இணைய விவாத குழுவான யூஸ்னெட்டில் உறுப்பினராக இருந்த மால்டா, தனது கல்லூரி நிர்வாகம் வழங்கிய இணைய வசதியை பயன்படுத்தி, சொந்த இணையதளம் ஒன்றையும் நடத்தி வந்தார்.

சிப்ஸ் & டிப்ஸ் ("Chips & Dips", ) எனும் பெயரிலான அந்த தளத்தில் அவர் தனக்கு பிடித்தமான விஷயங்களை எல்லாம் இடம் பெறச்செய்தார். அவர் தொழில்நுட்ப பித்தர் ( கீக்) என்பதால், பெரும்பாலும், தொழில்நுட்பம் சார்ந்த தகவல்களின் இணைப்புகளை சிறு குறிப்புகளுடன் தினமும் பட்டியலிட்டு வந்தார். இணையத்தில் கண்டெடுத்தவை மற்றும் இமெயில் மற்றும் ஐ.ஆர்.சி அரட்டையில் நண்பர்கள் பகிர்ந்து கொண்ட தகவல்களின் தொகுப்பாக இவை அமைந்தன.

மால்டாவின் இந்த தளத்தை, அந்த காலத்து வலைப்பதிவு என்று குறிப்பிடலாம். ஆனால், வலைப்பதிவும் எனும் கருத்தாக்கம் அறிமுகமாகி, பிரபலமாக இன்னும் சில ஆண்டுகள் இருந்தன. இந்த பின்னணியில் தான், தனது சொந்த தளத்தில் தினமும் குவிந்து கொண்டிருந்த செய்திகளுக்கான இணைப்பை இன்னும் திறம்பட கையாளவதற்கான வழி தேவை என உணர்ந்தார்.

இந்த நோக்கத்திற்காக தான் அவர் ஸ்லேஷ்டாட் இணையதளத்தை துவக்கினார். தொழில்நுட்ப பித்தர்களுக்கான செய்திகள் எனும் கோஷத்துடன், தன்னைப்போன்ற தொழில்நுட்ப ஆர்வலர்களை கவரக்கூடிய செய்திகளை ஸ்லேஷ்டாட்டில் பகிர்ந்து கொண்டார்.

ஆனால் தனிமனித இணையதளமாக ஸ்லேஷ்டாட் அமையவில்லை. நண்பர்கள் மற்றும் தளத்தின் பயனாளிகள், செய்திகளை பகிர வழி செய்தார். செய்திகள் தொடர்பான கருத்துகளை தெரிவிக்கவும் வழி செய்தார். பகிரப்படும் செய்திகளை சரி பார்த்து, அனுமதிக்கும் பொறுப்பை

தன்னிடம் வைத்துக்கொண்டார்.

செய்திகளை தெரிந்து கொள்வதோடு, பயணர்களே செய்திகளை பகிர்ந்து கொள்ளலாம் என்பது ஸ்லேஷ்டாட்டின் தனித்தன்மையாக இருந்தது.

1998 ல், மேம்படுத்தப்பட்ட வடிவில் புதிய ஸ்லேஷ்டாட் தளம் அறிமுகம் செய்யப்பட்டாலும், அதன் ஆதார அம்சங்கள் அப்படியே இருந்தன.

தொழில்நுட்பம் சார்ந்த, குறிப்பாக ஓபன் சோர்ஸ் மற்றும் லினக்ஸ் சார்ந்த செய்திகளையும், தகவல்களையும் தெரிந்து கொள்வதற்கான வழியாக இருந்ததால், தொழில்நுட்ப ஆர்வலர்கள் ஸ்லேஷ்டாட் தளத்தை நோக்கி ஈர்க்கப்பட்டனர். மேலும், செய்திகளை பயணர்களும் பகிர அனுமதி அளிக்கப்பட்டதால், பலரது கூட்டு முயற்சி அரிதான செய்திகளையும் எளிதாக தெரிந்து கொள்வதை சாத்தியமாக்கியது.

மேலும் செய்திகள் குறித்து விவாதிப்பதற்கான வசதி, ஸ்லேஷ்டாட்டை நமக்கான இடம் என தொழில்நுட்ப பிரியர்கள் கருத வைத்தது. இதன் பயனாக, அமெரிக்கா மட்டும் அல்லாமல் உலக அளவிலும் ஸ்லேஷ்டாட் பயனாளிகளை ஈர்க்கத்துவங்கியது.

பயணர்கள் சமர்பிக்கும் செய்திகள், மால்டா தலைமையிலான குழுவால் பரிசீலிக்கப்பட்டு, அதன் பின் முகப்பு பக்கத்தில் இடம்பெற்றன. இந்த தேர்வு முறை செய்திகளின் தரத்தை உறுதி செய்ததோடு, சமர்பிக்கப்படும் செய்திகள் தேர்வு செய்யப்பட்டால் பயணர்கள் தங்களுக்கான அங்கீகாரம் கிடைத்தது போல உணர்ந்தனர்.

ஆக ஸ்லேஷ்டாட் பங்கேற்பு தன்மையை அளித்தாலும், அதில் ஒரு ஒழுங்கு இருந்தது.

இதே போல, உறுப்பினராகும் வாய்ப்பும் அறிமுகம் செய்யப்பட்டது. பயணர்கள் தங்கள் அடையாளத்தை வெளிப்படுத்திக்கொள்ளாமல் கருத்து தெரிவிக்கவும் அனுமதிக்கப்பட்டனர். அதே நேரத்தில், மோசமான மற்றும் அவதூறு கருத்துகள், விவாதங்களை பாதிக்காமல் இருக்க, நெறிப்படுத்தல் முறை பின்பற்றப்பட்டது. ( ஸ்லேஷ்டாட்டில் கருத்துகளை தெரிவிக்க, ஸ்லேஷ் எனும் ஓபன் சோர்ஸ் மென்பொருள் பயன்படுத்தப்படுகிறது.)

பயணர்களின் கருத்துகள், நெறியாளர்களால் முறைப்படுத்தப்பட்டன. எனினும், இது ஜனநாயக தன்மையுடனே அமைந்திருந்தது. நெறியாளர்கள், கருத்துகளை அவற்றின் தன்மைக்கேற்ப மதிப்பிட்டனர். இந்த மதிப்பீட்டின் அடிப்படையில் கருத்துகள் ஏற்கப்பட்டன.

பங்கேற்பு தன்மை காரணமாக தினந்தோறும் ஆயிரக்கணக்கில் கருத்துகள் பகிரப்பட்டது,

செய்திகள் தொடர்பான விவாதங்களை ஆழமாக்கி ஸ்லேஷ்டாட் தளத்திற்கு துடிப்பான தன்மையை அளித்தது. ஆனால், விவாதங்கள் தடம் மாறாமல் ஸ்லேஷ்டாட் சமூகம் பார்த்துக்கொண்டது.

இந்த அம்சங்கள் எல்லாம் சேர்ந்து, தொழில்நுட்ப செய்திகளை தெரிந்து கொள்வதற்கான சிறந்த வழியாக ஸ்லேஷ்டாட்டை உயர்த்தியது. பல்லாயிரக்கணக்கான பார்வைகளோடு ஸ்லேஷ்டாட் இணையத்தின் செல்வாக்கு மிக்க தளமாக உருவானது.

1999 ம் ஆண்டு ஸ்லேஷ்டாட் தளம், ஆண்டோவர் நெட் எனும் லினக்ஸ் நிறுவனத்திடம் விற்கப்பட்டது. அதன் பிறகு ஆண்டோவர் நெட் தளம் வேறு ஒரு நிறுவனத்துடன் இணைக்கப்பட்டதால், சோர்ஸ்போர்ஜ் என பெயர் மாற்றம் செய்து கொண்டது.பின்னர் கீக்நெட் என மாறியது. பின்னர் ஏற்பட்ட வர்த்தக மாற்றங்களால் ஸ்லேஷ்டாட் மீடியாவால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

ஸ்லேஷ்டாட் கையகப்படுத்தப்பட்டாலும் அதன் நிர்வாக உரிமையை மால்டா பெற்றிருந்தார். எந்தவித தலையீடும் இல்லாமல் ஸ்லேஷ்டாட் சமூக நெறிமுறைக்கு ஏற்ப அதை நடத்தி வந்தார்.

இதனிடையே ஸ்லேஷ்டாட் மேலும் பல புதிய அம்சங்களையும் அறிமுகம் செய்தது. தனது செய்தி பரப்பையும் விரிவாக்கி கொண்டது. 2011 ம் ஆண்டு மால்டா, ஸ்லேஷ்டாட்டின் ஆசிரியர் பொறுப்பில் இருந்து முழுவதுமாக விலகி கொண்டார். எனினும், மால்டாவும் சகாக்களும் உருவாக்கிய பாதையில் ஸ்லேஷ்டாட் தொடர்ந்து பயணிக்கிறது.

## 3. ஸ்லேஷ்டாட் காட்டிய வழி!

ஸ்லேஷ்டாட்டை சமூக செய்தி தளம் என அறிமுகம் செய்கிறது விக்கிபீடியா. இந்த வகையான தளம் உருவாவதற்கான துவக்கப்புள்ளியாக அமைந்த தளம் என்பதே ஸ்லேஷ்டாட்டின் தனித்தன்மை. இது போன்ற ஒரு சேவை சாத்தியம் என யாரும் நினைத்து பார்த்திராத காலத்தில் பயணர்கள் பங்கேற்பு மூலம் செய்திகளை அடையாளம் காட்டும் சமூக செய்தி தளமாக ஸ்லேஷ்டாட் அறிமுகமானது என்பது இந்த தனித்தன்மையை மேலும் விஷேசமாக்குகிறது.

ஸ்லேஷ்டாட்டிற்கு முன், செய்தி சார்ந்த இணையதளங்கள் பல இருந்தன. அவை பெரும்பாலும் பாரம்பரிய ஊடக நிறுவனங்களால் நடத்தப்பட்டன. இதனிடையே, இணையம் சார்ந்த நிறுவனங்களின் பிரத்யேக செய்தி தளங்களும் உருவாகியிருந்தன. ஆனால், இவையும் பாரம்பரிய ஊடக வழியில் தான் செயல்பட்டன.

இவைத்தவிர மூல செய்தி தளங்களாக இல்லாமல், மற்ற தளங்களின் செய்திகளை தொகுத்தளிக்கும் இணையதளங்களும் இருந்தன. வலைவாசலாக உருவெடுத்த யாஹு இவ்விதமே செய்திகளை தொகுத்தளித்தது.

செய்திகளை பொருத்தவரை நிருபர்கள் செய்தி சேகரித்தனர். ஆசிரியர் குழு அவற்றை சரி பார்த்து வெளியிட்டது. வாசகர்கள் அவற்றை வாசித்தனர், கருத்து தெரிவித்தனர்.

ஆனால் இதற்கு மாறாக ஸ்லேஷ்டாட், பயனாளிகளே செய்திகள்/கட்டுரைகளை பகிர்ந்து கொள்ள வழி செய்தது. இப்படி பகிரப்பட்ட செய்திகள் சக பயணர்களால் சீர் தூக்கி பார்க்கப்பட்டு அதனடிப்படையில் பட்டியலிடப்பட்டன. பகிரப்பட்ட செய்திகள்/ கட்டுரைகள் தங்கள் கருத்துக்களை தெரிவிக்கவும் வழி இருந்தது. இது தகவல் சார்ந்த விவாத களமாகவும் அமைந்தது.

இவ்வாறு பயனாளிகளால் பகிர்ந்து கொள்ளப்பட்டு, கண்டறியப்பட்டு விவாதிக்கப்படும் செய்திகளே சமூக செய்திகள் என குறிப்பிடப்படுகின்றன. இணையத்தில் செய்திகள் கண்டறியப்படும் விதத்தில் பெரும் மாற்றமாகவும், புதிய வாய்ப்பாகவும் இது அமைந்தது.

இந்த போக்கை ஸ்லேஷ்டாட்டே துவக்கி வைத்தது.

இப்போது இது சாதாரணமாக மட்டும் அல்ல, மிக இயல்பாகவும் கூட தோன்றலாம். செய்திகளுக்கான இணைப்பை டிவிட்டரிலும், பேஸ்புக்கிலும், இன்னும் பிற சமூக ஊடகங்களிலும் எளிதாக பகிர்ந்து கொள்ள முடிகிறது. செய்திகள் தொடர்பான விமர்சனத்தை வலைப்பதிவுகளில்

விரிவாக எழுத முடிகிறது.

மேலும், பயணர்களே செய்திகளை பகிர்ந்து கொண்டு விவாதிக்க ரெட்டிட் போன்ற இணையதளங்களும் இருக்கின்றன. ஆனால், ஸ்லேஷ்டாட் அறிமுகமான காலத்தில் இணையம் எப்படி இருந்தது என்பதை திரும்பி பார்த்தால், 1997 ல் இப்படி ஒரு இணையதளம் உருவானது சாதாரணமானது அல்ல என்பது புரியும்.

அப்போது இணையத்தில் வலைப்பதிவுகள் உருவாகியிருக்கவில்லை: சமூக வலைப்பின்னல் தளங்கள் அறிமுகமாகி இருக்கவில்லை. இவ்வளவு ஏன், தேடியந்திரமான கூகுளும் கூட அறிமுகம் ஆகவில்லை. இணையம் என்பது வெகுமக்கள் மத்தியில் பிரபலமாகி கொண்டிருந்த காலம்.

இணையம் என்பது பெரும்பாலும் ஒரு வழிப்பாதையாகவே இருந்தது. பயனாளிகள் விரும்பினால், ஜியோசிட்டிஸ் போன்ற சேவைகள் மூலம் தனிப்பட்ட இணையதளங்களை அமைத்துக்கொள்ள முடிந்தது. கருத்துக்களை தெரிவிக்க வேண்டும் என்றால், விவாத குழுக்கள் பக்கம் செல்ல வேண்டும் அல்லது செய்தி தளங்களின் பின்னூட்ட வசதியை நாட வேண்டியிருந்தது.

இந்த பின்னணியில் தான் ராப் மால்டா என்பவர் ஸ்லேஷ்டாட் தளத்தை அறிமுகம் செய்தார்.

'தொழில்நுட்ப பித்தர்களுக்கான செய்தி' ( **News for nerds**, *stuff that matters)* எனும் விளக்க வாசகத்துடன் அறிமுகமான இந்த தளத்தின் வடிவமைப்பும், உள்ளடக்கமும் சாதாரணமாகவே இருந்தது.

இந்த தளத்தில், செய்திகளை சுட்டிக்காட்டும் தலைப்பு, அவற்றுக்கான அறிமுகம் மற்றும் இணைப்பு மட்டுமே வரிசையாக பட்டியலிடப்பட்டிருந்தன. செய்திகளுக்கு கீழ், கருத்து தெரிவிக்கும் வசதியும் அளிக்கப்பட்டிருந்தது.

இவைத்தவிர, ஸ்லேஷ்டாட் வாக்குப்பதிவு, விரைவான இணைப்புகள், அண்மை செய்திகள் ஆகிய பகுதிகள் இடம்பெற்றிருந்தாலும், அடிப்படையில் செய்தி இணைப்புகளுக்கான தளமாகவே இருந்தது. முகப்பு பக்கத்தில் மேலே, 'ராப்' பக்கம், அறிமுகம், பழைய செய்திகள் ஆகிய பகுதிகளுடன், 'நீங்களும் பங்களிக்கலாம்' என தெரிவிக்கும் பகுதியும் இருந்தது.

இப்படி தான் ஸ்லேஷ்டாட் அறிமுகமானது.

அடிப்படையில் பார்த்தால், ஸ்லேஷ்டாட் சுவாரஸ்யமான செய்திகளை பட்டியலிடும் தளமாக இருந்தது. இணைய வெளியில் இருந்து கவனிக்க வேண்டிய செய்தியை தேடி எடுத்து, அந்த செய்தியை எதற்காக வாசிக்க வேண்டும் எனும் விளக்கத்துடன் அறிமுகம் செய்யப்பட்டிருந்தது.

செய்திகள் என்றால் பொதுவான செய்திகள் அல்ல: தொழில்நுட்ப ஈடுபாடு கொண்டவர்களுக்கு ஆர்வம் அளிக்க கூடிய வகையில், ஓபன் சோர்ஸ், லினக்ஸ், மென்பொருள் போன்றவை தொடர்பான செய்திகளே பகிரப்பட்டன.

இந்த வகை செய்திகளை ஆர்வம் உள்ளவர்கள் தாங்களாகவே இணையத்தில் தேடி படிக்கலாம் தான். இதற்கு ஏற்ற இணையதளங்களையும் ஒருவர் அறிந்து வைத்திருக்கலாம். அல்லது செய்தி குழுக்களுக்கு விஜயம் செய்து அங்கு நடைபெறும் விவாதங்களுக்கு நடுவே செய்தி கீற்றுகளை கண்டறியலாம்.

ஆனால், ஒருவர் தொழில்நுட்பம் தொடர்பான எல்லா இணையதளங்களையும் அறிந்திருக்க முடியாது. அப்படியே அறிந்திருந்தாலும் எல்லா தளங்களையும் கவனித்துக்கொண்டிருக்க முடியாது. தினமும் பார்த்துக்கொண்டிருக்கும் தளங்களில் கூட, சுவாரஸ்யமான செய்திகளை தவறவிடலாம்.

ஆனால், இது போன்ற பொருட்படுத்தக்கூடிய செய்திகளை எல்லாம் ஒரே இடத்தில் தெரிந்து கொள்வது சிறந்தது தானே. அதிலும் அந்த செய்திகள் ஒருவரால் அல்லது ஒரு குழுவால் தொகுக்கப்படாமல், கூட்டு முயற்சியின் பலனாக திரட்டப்படுவதாக இருந்தால் இன்னும் சிறப்பு தானே.

இதை தான் ஸ்லேஷ்டாட் செய்தது. மால்டா தனது சொந்த ஆர்வத்தின் பயனாக சகாக்களுடன் இணைந்து ஸ்லேஷ்டாட் தளத்தை துவக்கியிருந்தார். இணைய உலகில் தான் கண்டெடுத்த சுவாரஸ்யமான, பயனுள்ள செய்திகளை பிரதானமாக பகிர்ந்து கொண்டாலும், மற்றவர்களும் இவ்வாறு பகிர்ந்து கொள்ள வழி செய்திருந்தார். அவருடன் தொழில்நுட்ப ஆர்வலர்களின் குழு இந்த பணியை செய்ததோடு, ஆர்வம் உள்ள வாசகர்களும் தாங்கள் கண்டறியும் சுவாரஸ்யமான செய்திகளை பகிர்ந்து கொள்ள வாய்ப்பளிக்கப்பட்டது.

நீங்களும் செய்திகள் தொடர்பாக தகவல் தெரிவிக்கலாம் என ஊக்குவிக்கப்பட்டதோடு, இதை செய்ய சிறந்த வழி, பங்கேற்பவர்களுக்கான படிவத்தை சமர்பிப்பது என்றும் தெரிவிக்கப்பட்டிருந்தது. இது, வாசகர்கள் ஆர்வத்துடன் பங்கேற்பதற்கான வழியாக அமைந்தது.

ஒரு தளத்தில் செய்திகளை வாசிப்பதோடு, அதில் இடம்பெறக்கூடிய செய்திகளை தாங்களும் பகிர்ந்து கொள்ளலாம் எனும் வாய்ப்பு புதுமையாக இருந்தது. இந்த பங்கேற்பு தன்மை ஸ்லேஷ்டாட் தளத்தின் மீது வாசகர்களுக்கு கூடுதல் பிடிப்பை உண்டாக்கியது. இது நம்முடைய இடம் என அவர்கள் நினைத்தனர்.

வாசகர்களின் பங்களிப்பு செய்திகளின் தேர்வை இன்னும் பரவலாக்கியது. அதே நேரத்தில்,

வாசகர்களின் பகிர்வு நேரடியாக தளத்தில் இடம் பெற்றுவிடவில்லை. மால்டா தலைமையிலான ஆசிரியர் குழு, இந்த பரிந்துரைகளை பரிசீலித்து பொருத்தமானவற்றை அனுமதித்தது. ஆக, செய்திகள் பலரால் சமர்பிக்கப்பட்டாலும், அவை ஆசிரியர் குழுவால் பரிசீலிக்கப்பட்ட பின்னரே தேர்வு செய்யப்பட்டது. சுவாரஸ்யமான தன்மையும், பயன்பாட்டு அம்சமும் முக்கிய அளவுகோளாக கருதப்பட்டன.

இந்த வடிகட்டல் தரத்தை உறுதி செய்ததோடு, ஸ்லேஷ்டாட் முகப்பு பக்கத்தில் இடம் பெற தேர்வு செய்யப்படுவது என்பது, செய்திகளை சமர்பிப்பவர்கள் மத்தியில் ஒரு அங்கீகாரமாக கருதப்படும் நிலையையும் உண்டாக்கியது. எனக்கு பிடித்திருந்தால் தளத்தில் வெளியாகும் என செய்திகள் தேர்வில் நிறுவனர் மால்டா தனிப்பட்ட அணுகுமுறையை பின்பற்றினாலும், அது அதிகாரமாக மாறாமல் தளத்திற்கான ஆளுமை அம்சமாகவே அமைந்தது.

திறவு மூல தன்மை என்பது மென்பொருள் உலகில் அப்போது பிரபலமாக இருந்தாலும், மைய அதிகாரம் இல்லாமல், திறந்த முறையிலான பங்களிப்புடன் செயல்படும் முறை உள்ளடக்க உலகிற்கு அந்நியமாகவே இருந்தது. எனவே, மால்டா பின்பற்றிய கட்டுப்பாடுடன் கூடிய திறந்த வெளி தன்மை அந்த கால கட்டத்தில் ஸ்லேஷ்டாட்டிற்கு பொருத்தமாகவே இருந்தது.

பங்கேற்பு தன்மை ஸ்லேஷ்டாட் வாசகர்களை உறுப்பினர்களாக்கியது என்றால், செய்திகள் தொடர்பாக கருத்து தெரிவிப்பதற்கான வாய்ப்பு சமூக தன்மையை உண்டாக்கியது. ஸ்லேஷ்டாட்டில் பகிரப்படும் செய்திகள், அதன் பல்வேறு கோணங்களுக்கு ஏற்ப விரிவாக விவாதிக்கப்பட்டன. உறுப்பினர்கள் தங்கள் கருத்துக்களை பதிவு செய்தனர். மற்றவர்கள் அதை ஒட்டியும், வெட்டியும் கருத்துகளை வெளியிட்டு விவாதத்தை தொடர்ந்தனர்.

ஒவ்வொரு செய்தி தொடர்பான விவாதமும், புதிய புரிதலை ஏற்படுத்துவதாக அமைந்தது. வீண் வம்புகளும், அவதூறுகளும் இடம்பெற்றிருந்தன என்றாலும், பெரும்பாலான கருத்துக்கள் பயனுள்ளதாகவே இருந்தன. இவ்விதமே தொடர்வதற்காக கருத்துகளை நெறிப்படுத்தும் முறையும் அமல் செய்யப்பட்டது. இந்த பொறுப்பும் உறுப்பினர்களிடமே விடப்பட்டது. தெரிவிக்கப்படும் கருத்துகளின் பொருத்தமான தன்மை குறித்து உறுப்பினர்கள் அளிக்கும் வாக்குகளுக்கு ஏற்ப, பின்னூட்டங்கள் முன்னிலைப்படுத்தப்பட்டன. அவதூறு கருத்துகள் தானாக பின்னுக்குத்தள்ளப்பட்டன.

இவை எல்லாமும் சேர்ந்து ஸ்லேஷ்டாட்டை பிரபலமாக்கியதோடு, அதை ஒரு இணைய சமூகமாகவும் உருவாக்கியது. ஸ்லேஷ்டாட் அபிமானிகள், ஆர்வத்துடன் அதில் பகிரப்படும்

செய்திகளை படித்ததோடு, பகிர்விலும், விவாதத்திலும் பங்கேற்றனர். இந்த பிணைப்பு ஸ்லேஷ்டாட் சமூகத்தை உருவாக்கியது. தளத்தின் நிறுவனரான ராப் மால்டா இந்த சமூகத்தின் தளபதியாக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

# 4. ஸ்லேஷ்டாட் விளைவு

ஸ்லேஷ்டாட் அடிப்படையில், தொழில்நுட்ப ஆர்வலர்களுக்கான இணையதளமாகவே துவங்கியது. லினக்ஸ், ஓபன் சோர்ஸ் போன்ற விஷயங்களில் ஆர்வம் உள்ளவர்களுக்கு ஸ்லேஷ்டாட் சுட்டிக்காட்டல்கள் தகவல் சுரங்கமாக இருக்கும். எனவே ஸ்லேஷ்டாட்டை இணையத்தின் தொழில்நுட்ப பேட்டைகளில் ஒன்றாக கருதலாம் அவ்வளவு தான்.

ஆனால், ஸ்லேஷ்டாட் தொழில்நுட்ப ஆர்வலர்கள் மட்டுமே அறிந்திருக்கும் தளமாக சிறிய அளவில் முடங்கிவிடாமல், இணைய உலகால் அலட்சியம் செய்யப்பட முடியாத தளமாக உருவானது. அதிலும் குறிப்பாக அறிமுகமான ஆண்டுகளில் ஸ்லேஷ்டாட்டின் செல்வாக்கு உச்சத்தில் இருந்தது.

இணையத்தில் ஸ்லேஷ்டாட் பெற்றிருந்த செல்வாக்கை, ஸ்லேஷ்டாட் விளைவு *(Slashdot effect)* மூலம் புரிந்து கொள்ளலாம்.

**அதென்ன ஸ்லேஷ்டாட் விளைவு?**

தொழில்நுட்ப உலகம் தொடர்பாக சுவாரஸ்யமான, பயனுள்ள செய்திகளை தெரிந்து கொள்ள வழி செய்வது தான் ஸ்லேஷ்டாட்டின் நோக்கம். இதுவே தளத்தின் பிரதான பயன்பாடாகவும் அமைகிறது. ஆக, ஸ்லேஷ்டாட்டிற்கு வருகை தரும் உறுப்பினர்கள், அதில் சுட்டிக்காட்டப்படும் செய்திகளில் தங்களுக்கு பிடித்தமானவற்றை நாடி செல்வதும் இயல்பாக நிகழ்ந்தது.

மேலும், பொருட்படுத்தக்கூடிய செய்திகளை சுட்டிக்காட்டுவதன் மூலம் ஆர்வம் மிக்க சமூகத்தை ஸ்லேஷ்டாட் உருவாக்கியிருந்தது. இதன் விளைவு தான், ஸ்லேஷ்டாட் விளைவு!

அதாவது, ஸ்லேஷ்டாட்டால் சுட்டிக்காட்டுப்படும் செய்தி இணைப்புகளை பார்த்து உறுப்பினர்களும், மற்றவர்களும் தொடர்புடைய இணையதளத்திற்கு படையெடுப்பதால், இணைய போக்குவரத்து அதிகரித்து அந்த தளமே தற்காலிகமாக முடங்கி விடுவது உண்டு.

இப்படி,ஸ்லேஷ்டாட் இணைப்பால், குறிப்பிட்ட ஒரு இணையதளத்திற்கு திடிரென பயனாளிகள் எண்ணிக்கை பல மடங்கு அதிகரித்து அந்த தளமே செயல்பட முடியாமல் போகும் நிகழ்வு தான் ஸ்லேஷ்டாட் விளைவு என குறிப்பிடப்படுகிறது.

ஸ்லேஷ்டாட் வளரத் துவங்கிய காலத்தில், எண்ணற்ற இணையதளங்கள் இப்படி ஸ்லேஷ்டாட் விளைவுக்கு உள்ளாகி கவனம் பெற்றன. முன் பின் அறிந்திராத இணையதளங்கள் கூட,

ஸ்லேஷ்டாட்டில் சுட்டிக்காட்டப்பதால், திடிரென பெருங்கூட்டத்தை ஈர்த்து திக்குமுக்காடி அதன் சர்வர்கள் செயலிழந்ததும் உண்டு.

இணைப்புகள் மூலம் சுட்டிக்காட்டப்படுவதே வலையின் தனித்தன்மைகளில் ஒன்று என்பதால், ஒரு தளத்தில் இருந்து பிரிதோர் தளத்திற்கு இணைய போக்குவரத்து அமைவது இயல்பானதே. யாஹு போன்ற கையேடுகளும், தேடியந்திரங்களும், வலைவாசல்களும் இதை தான் செய்கின்றன. இருப்பினும், திடிர் இணைய போக்குவரத்தால் தொடர்ந்து பல தளங்களை ஸ்லேஷ்டாட் போல கவனத்திற்கு கொண்டு வந்த ஒற்றை இணையதளம் வேறில்லை.

ஸ்லேஷ்டாட் விளைவால் பல இணையதளங்கள் வெளிச்சத்திற்கு வந்தன என்றால், இந்த நிகழ்வால் ஸ்லேஷ்டாட்டும் தன் மீது கவனத்தை ஈர்த்து செல்வாக்கு பெற்றது.

ஸ்லேஷ்டாட் விளைவு இரண்டு விஷயங்களை செய்தது. பொருட்படுத்த வேண்டிய இணையதளங்களை தெரிந்து கொள்வதற்கான வழியாக அது அமைந்தது.

இதன் விளைவாக, ஸ்லேஷ்டாட் அடையாளம் காட்டிய இணையதளங்கள் பற்றி ஊடகங்கள் செய்தி வெளியிட்டன.

ஆக, ஸ்லேஷ்டாட் விளைவு என்பது செய்தி வெளியீட்டிற்கான ஆதாரமாகவும் அமைந்தது. இணைய உலக நிகழ்வுகளை ஆர்வத்துடன் பதிவு செய்யக் காத்திருந்த பத்திரிகையாளர்களுக்கு, ஸ்லேஷ்டாட் விளைவும் ஒரு ஆதாரமாக அமைந்தது.

இது தவிர, ஸ்லேஷ்டாட் விவாதங்களையும் பத்திரிகையாளர்கள் உன்னிப்பாக கவனித்து வந்தனர். ஸ்லேஷ்டாட் விவாதங்களும் செய்தியாயின.

ஸ்லேஷ்டாட் விளைவு என்பது பரவலாக உணரப்பட்ட நிகழ்வாக இருந்தாலும், ஜான் அபாட் எனும் ஸ்லேஷ்டாட் பயணர், 1998 ல் இந்த பதத்தை முதன் முதலில் பயன்படுத்தியதாக, இந்த விளைவு தொடர்பான நோ யுவர் மீம் தள பதிவு தெரிவிக்கிறது.

அடுத்த ஆண்டு வாக்கில், இந்த பதம் மிகவும் பிரபலமாகிவிட்டது. திடிரென அதிக இணைய போக்குவரத்துக்கு உள்ளாகும் தளங்களை குறிக்க ஸ்லேஷ்டாட் விளைவு எனும் சொல் ஒரு வினைச்சொல்லாகவே பயன்படலாயிற்று. ஸ்லேஷ்டாட்டட் என்ற சொல்லும் இதற்கு பயன்படுத்தப்பட்டது.

புத்தாயிரமாண்டில், இந்த நிகழ்வும் இணையத்தில் அடிக்கடி உண்டானது. இந்த கால கட்டத்தில் வலைப்பதிவுகளும் அதிகரிக்கத்துவங்கியிருந்ததால், ஸ்லேஷ்டாட்டில் சுட்டிக்காட்டப்படும்

விஷயங்களும் அதிகரித்து அதன் பயனாக கவனம் பெறும் தளங்களும் அதிகரித்தன.

அந்த காலகட்டத்தில், பெரிய செய்தி தளங்கள் தவிர மற்ற தளங்களும், வலைப்பதிவுகளும் போதிய சர்வர் ஆற்றலை பெற்றிராமல் இருந்தது, அவற்றால் திடிரென அதிகரிக்கும் போக்குவரத்தை சமாளிக்க முடியாமல் போனதற்கு ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால், அவற்றை நோக்கி இணையவாசிகளை படையெடுக்க வைத்த ஸ்லேஷ்டாட் சமூகத்தின் ஆற்றலை மறுப்பதற்கில்லை.

ஸ்லேஷ்டாட் விளைவு தொடர்பாக அதன் நிறுவனர் ராப் மால்டா, சிஎனெட் தளத்திற்கு ஒரு முறை அளித்த பேட்டியில், இந்த விளைவு தனக்கு ஆச்சர்யத்தை அளிக்கவில்லை என தெரிவித்துள்ளார். நாங்கள் சிறிய அளவில் இருந்த போது, யாரும் எங்களை கவனிக்கவில்லை.அதன் பிறகு எங்கள் தாக்கம் சில சர்வர்களை சாய்த்தது. பின் இது அதனளவில் ஒரு தனி நிகழ்வானது' என்றும் தெரிவித்துள்ளார்.

பல சிறிய நிறுவனங்களின் இணையதளங்கள் ஸ்லேஷ்டாட் விளைவுக்கு உள்ளாகி, சில தினங்கள் வர்த்தகத்தை மேற்கொள்ள முடியாமல் திணறிய கதைகளும் அநேகம் இருக்கின்றன. இவ்வளவு ஏன், ஸ்லேஷ்டாட் விளைவுக்கு உள்ளாகும் இணையதளங்கள், அதன் பாதிப்பை எதிர்கொள்வதற்காக என்றே, ஜே ஜேக்கப்சன் என்பவர் 'மிரர்டாட்' எனும் இணையதளத்தை நடத்தி வந்தார். ஸ்லேஷ்டாட் விளைவுக்கு உள்ளாகும் இணையதளங்களை பார்வையாளர்களுக்காக நகலெடுத்து வைக்கும் கண்ணாடியாக இந்த தளம் செயல்பட்டது.

ஸ்லேஷ்டாட்டிற்கு பிறகு, சமூக செய்தி தளமாக உருவான டிக் தளத்தால் அடையாளம் காண்பிக்கப்படும் தளங்களும் இத்தகைய விளைவுக்கு உள்ளானது உண்டு. இது டிக் விளைவு என குறிப்பிடப்பட்டது.இதே போல ரெட்டிட் தளத்தால் ஏற்படும் தாக்கம் ரெட்டிட் விளைவு எனப்படுகிறது. என்றாலும், இவற்றுக்கு எல்லாம் ஆரம்ப புள்ளி ஸ்லேஷ்டாட் விளைவு தான்.

- 

இணைப்பு: *https://knowyourmeme.com/memes/slashdot-effect*

*https://www.cnet.com/news/behind-the-slashdot-phenomenon/*

## 5. இணையத் தளபதி மால்டா !

ஸ்லேஷ்டாட் நிறுவனர் ராப் மால்டாவுக்கு இன்னொரு பெயர் இருக்கிறது. காமேண்டர் மால்டா ( "CmdrTaco" **Malda** ) என்றே அவர் ஸ்லேஷ்டாட் சமூகத்தில் அழைக்கப்படுகிறார். ஸ்லேஷ்டாட் தளத்தை துவக்கிய போது, இது தான் அவரது பயணர் பெயராக இருந்தது. தளபதி மால்டா என பொருள் வரும் இந்த பெயரால் தான் அவர் பெரும்பாலும் அறியப்படுகிறார்.

தளபதி மால்டா என அழைக்கப்படுவது பல விதங்களில் அவருக்கு மிகவும் பொருத்தமானதே. ஏனெனில், ஸ்லேஷ்டாட் சமூகத்தை பொருத்தவரை அவர் தான் தளபதி. ஆனால் சர்வாதிகாரம் இல்லாத பாசக்கார தளபதி.

ஸ்லேஷ்டாட், தொழில்நுட்பத்தால் பிணைக்கப்பட்ட தன்னார்வலர்கள் நிறைந்த சமூகம். இந்த சமூகத்தை வழிநடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டவர் மால்டா. அவரது தொலைநோக்கும், தொழில்நுட்ப ஆர்வமும் தான் ஸ்லேஷ்டாட் கூட்டு முயற்சியின் இருப்பிடமாக விளங்க ஆதாரமாக அமைந்தன.

ஸ்லேஷ்டாட், பயனாளிகள் பகிர்வுக்கு வழி வகுத்த முதல் இணையதளங்களில் ஒன்றாக விளங்கினாலும், அதில் பகிரப்படும் செய்திகளை நெறியாளும் பொறுப்பை மால்டா தன் வசமே வைத்துக்கொண்டார்.

ஸ்லேஷ்டாட்டில், யார் வேண்டுமானாலும் செய்திகளை சமர்பிக்கலாம் என்பது ஸ்லேஷ்டாட்டின் பலமாக இருந்தாலும், எந்த செய்தி தளத்தில் இடம்பெறும் என்பதை தேர்வு செய்யும் உரிமையை, மால்டா தனது தலைமையிலான குழுவிடமே தக்க வைத்துக்கொண்டதன் மூலம், இந்த தளத்திற்கு எப்போதுமே ஆசிரியர் குழு வழிகாட்டல் இருக்குமாறு பார்த்துக்கொண்டார்.

செய்திகள் தேர்வை பொருத்தவரை, அடிப்படையில் தனது தனிப்பட்ட ஆர்வத்தையே அளவுகோளாக கொண்டிருந்தார். சுவாரஸ்யமானது, பயனுள்ளது என தான் கருதும் செய்திகள் ஸ்லேஷ்டாட் முகப்பு பக்கத்தில் இடம்பெறும் என அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

எனக்கு பிடித்திருந்தால், ஸ்லேஷ்டாட்டில் இடம்பெறும் என்பதே அவரது கோட்பாடாக இருந்தது. ஆனால், இது தனிப்பட்ட ரசனையின் வெளிப்பாடாக மாறிவிடாமல், கூட்டு முயற்சி அடிப்படையில் செய்தி பகிர்வில் ஈடுபட்ட தொழில்நுட்ப சமூகத்தை நெறிபடுத்தும் கொள்கையாக அமைந்தது. ஏனெனில், மால்டா தனக்கு பிடித்த செய்திகள் தான் சார்ந்த சமூகத்திற்கு

பிடித்தமானதாகவும், பயனுள்ளதாகவும் இருக்க வேண்டும் என கருதி செயல்பட்டார்.

என் உள்ளுணர்வை நம்புகிறேன். நான் ஒரு முழு தொழில்நுட்ப பித்தன். எனக்கு பிடித்தமானதை கண்டறிந்தால் அது எல்லோருக்கும் பிடித்தமானதாக இருக்கும்'' என்று சலோன் இணைய இதழில் தன்னைப்பற்றிய கட்டுரைக்கான பேட்டியில் குறிப்பிட்டுள்ளார்.

இந்த அம்சமே, ஸ்லேஷ்டாட் தளத்திற்கு வேறு எந்த சமூக தளத்திற்கும் இல்லாத தனிப்பட்ட அம்சத்தை கொடுத்தது. ஸ்லேஷ்டாட் தளத்திற்கு என்று ஒரு ஆளுமை குணம் இருந்தது. அது மால்டாவின் ஆளுமையை சார்ந்திருந்தது. அவரது ஆளுமையோ, ஓபன் சோர்ஸ் கோட்பாடு சார்ந்திருந்தது.

ஓபன் சோர்ஸ் நுட்பம் சார்ந்த ஆர்வமே மால்டாவை ஸ்லேஷ்டாட்டை துவக்க வைத்தது.

இந்த தளத்தை துவக்கிய போது, இணையத்தை மாற்றி அமைக்க வேண்டும் என்ற எண்ணம் எல்லாம் அவருக்கு இருக்கவில்லை. அதற்காக அவர் திட்டமிடவும் இல்லை. ஆனால், ஸ்லேஷ்டாட் அதை தான் செய்தது. மால்டாவின் ஆர்வமும், தொழில்நுட்ப விஷயங்களை இணையத்தின் ஆற்றல் மூலம் பரவலாக பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற வேட்கையுமே இதற்கு அடித்தளமாக அமைந்தன.

கல்லூரியில் நான் செய்து கொண்டிருந்ததான் நீட்டிப்பாக ஸ்லேஷ்டாட் அமைந்திருந்தது என்று அவர் பேட்டி ஒன்றில் கூறியிருக்கிறார். ( நெட் சக்ஸஸ் ரீவ்யூ புத்தகம்). நான் மற்றவர்களுக்காக இணையதளங்கள் அமைத்துக்கொடுத்து கொண்டிருந்தேன். பின்னர் எனக்காக ஒன்று உருவாக்கி கொண்டேன். அதை இப்போது லட்சக்கணக்கானோர் படிக்கின்றனர்'' என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

லினக்ஸ் மற்றும் தொழில்நுட்பம் மீதான எனது ஆர்வத்தை, இணைய வடிவமைப்பு திறனுடன் இணைத்து, செல்வாக்கு மித்தாக உருவான மற்றும் இன்றளவும் இணையத்தின் பெரிய, தாக்கம் மிகுந்த தளங்களில் ஒன்றை உருவாக்கினேன் என்றும் அவர் அதில் கூறியுள்ளார்.

தொழில்நுட்ப பித்தரான மால்டாவிடம் விளையாட்டுத்தனமும், துடுக்கான தன்மையும் உண்டு. ஸ்லேஷ்டாட் எனும் பெயரை தேர்வு செய்த விதத்தில் இருந்தே இதை புரிந்து கொள்ளலாம். புதிய இணையதளத்தை நிறுவ முயன்ற போது, அந்த தளத்தின் பெயர் கல்லூரி இணையதள முகவரி போல இருக்க கூடாது என நினைத்தவர், பெயர் வித்தியாசமாகவும் இருக்க வேண்டும் என விரும்பினார். இதன்படியே, உச்சரிக்க கஷ்டமாக இருக்கும் வகையில், ஸ்லேஷ் குறியீட்டை தொடர்ந்து ஸ்லேஷ் எனும் வார்த்தைகள் தொடர்ந்து வருவதை குறிக்கும் வகையில் ஸ்லேஷ்டாட் என பெயர் சூட்டினார். ஆனால், அந்த பெயரே இணையத்தில் எல்லோரும் உச்சரிக்கும் பெயரானது.

ஸ்லேஷ்டாட், சுதந்திர மென்பொருளை மையமாக கொண்டு இயங்கியதோடு, அதன் அமைப்பும் கூட அவ்வாறே அமைந்திருந்ததாக, சலோன் கட்டுரை குறிப்பிடுகிறது. லின்கஸ் இயங்குதளத்திற்கு அதன் நிறுவனர் லினஸ் டார்வல்ஸ் எப்படியோ அதே போல தான் ஸ்லேஷ்டாட் சமூகத்திற்கு மால்டாவும். டார்வல்சும், மால்டாவும், தரத்தை உறுதி செய்து, தலைமையாக செயல்பட்டு தனது படைகளை வழி நடத்துகின்றனர் என்றாலும், இருவருமே ஆயிரக்கணக்கான தன்னார்வலர்களின் பங்களிப்பு இல்லாமல் வெற்றி பெற்றிருக்க முடியாது என இக்கட்டுரை வர்ணிக்கிறது.

மால்டாவும் இதை நன்கு உணர்ந்திருந்தார். துவக்கத்தில், செய்திகள் கண்டறிவதிலும், தேர்வு செய்வதிலும் அவர் அதிகம் ஈடுபட்டிருந்தார்.இதற்காக பல மணி நேரங்களை செலவிட்டார். ஆனால், ஸ்லேஷ்டாட் சமூகம் வலுப்பெற்ற பின்னர், தனது தேர்வை குறைத்துக்கொண்டு மற்றவர்கள் அந்த பணியை செய்ய ஊக்குவித்தார்.

அதற்கேற்ப, ஸ்லேஷ்டாட் பங்கேற்பாளர்களும் தாங்கள் பொதுநலன் கருதி செயல்படுவதாக நினைப்பதால், தளத்திற்கான உழைப்பை பெரிதாக நினைப்பதில்லை. தங்களைப்போலவே, சுதந்திர மென்பொருள் பண்புகளை ஆதார கொள்கையாக கருதும் மால்டாவை தங்கள் தளபதியாக அவர்கள் ஏற்றுக்கொண்டனர். ஸ்லேஷ்டாட் போன்ற ஒரு தளம் வெற்றி பெற இத்தகைய கொள்கைப்பிடிப்பும்,கூட்டு லட்சியமும் அவசியம்.

எனினும், ஸ்லேஷ்டாட் சுதந்திர மென்பொருள் சார்ந்தது மட்டும் அல்ல. ஒட்டுமொத்த தொழில்நுட்ப சமூகத்தின் நலனுக்கான ஆர்வமும் அதை இயக்குகிறது.

ஸ்லேஷ்டாட், இணைய உலகின் ஆரோக்கியமான சமூகங்களில் ஒன்றாக விளங்குகிறது. இது பற்றி பேட்டி ஒன்றில் கேட்கப்பட்ட போது, எதையும் திட்டமிட்டு செய்யவில்லை. எல்லாம் தானாக நிகழ்ந்தன. பிரச்சனைகள் உருவான போது அவற்றுக்கு தீர்வு காணும் வழிகளை தேடினேன் என்று மால்டா கூறியிருக்கிறார். ( வாஷிங்டன் போஸ்ட்)

ஸ்லேஷ்டாட்டில் இருந்து விலகிய பிறகு அளித்த பேட்டியில், ஸ்லேஷ்டாட் போலவே உருவாக்கப்பட்ட ஹேக்கர் நியூஸ் தளம் பற்றியும் அவர் குறிப்பிடுகிறார். இன்னொரு ஹேக்கர் நியூஸ் தளம் உருவாக வாய்ப்பில்லை என்பவர், இணையத்தில் அதிகாரம் மேலும் பரவலாக்கப்பட்டுவிட்டது என்று இதற்கான காரணத்தை விளக்கியுள்ளார். டிவிட்டர் சேவை பற்றியும் இதில் விரிவாக பேசுகிறார்.

15 ஆண்டுகளுக்கு முன், ஸ்லேஷ்டாட், இமெயில் பட்டியல் மற்றும் ஐ.ஆர்.சி நுட்பங்களில் தான் பெற்ற சிறந்த அனுபவம் இப்போது டிவிட்டர் போன்ற நுட்பங்களில் பெறவில்லை என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

## 6. இதழியலில் புதிய பாதை

*இணைய வரலாற்றை திரும்பி பார்த்தால், 1997 ல் ஸ்லேஷ்டாட் தளம் உதயமானது எத்தனை பெரிய ஆச்சர்யம் என புரிந்து கொள்ளலாம். அப்போது இருந்த இணைய பரப்பு அப்படி.*

*உலக புகழ் பெற்ற பிபிசி செய்தி நிறுவனம், அதிகாரப்பூர்வமாக ஆன்லைனில் அடியெடுத்து வைத்தது 1997 ல் தான். முன்னணி நாளிதழான நியூயார்க் டைம்சின் இணைய பதிப்பு 1996 ம் ஆண்டில் தான் துவக்கப்பட்டிருந்தது. இந்திய அளவில் தி இந்து குழுமமும், இதே ஆண்டைல் இணைய பதிப்பை கொண்டு வந்திருந்தது. தி கார்டியன், டெலிகிராப் என விரல் விட்டு எண்ணக்கூடிய நாளிதழ்களே தங்களுக்கான இணையதளத்தை அமைத்திருந்தன.*

*மைக்ரோசாப்டின் ஸ்லேட் (**Slate** ) மற்றும் சலோன் (salon.com ) இணையத்தை முதன்மையாக கொண்ட ஆன்லைன் இதழ்கள் துவக்கப்பட்டிருந்தன. இதே கால கட்டத்தில் சக்.காம் போன்ற இணையம் சார்ந்த சுயேட்சை ஆன்லைன் இதழ்களும் உருவாயின.*

*இருப்பினும், இதழியல் துறை பாரம்பரிய முறையிலேயே செயல்பட்டு வந்தது. இணையத்தை போட்டியாக எடுத்துக்கொள்வதா அல்லது அதை சாதகமாக பயன்படுத்திக்கொள்ள முயற்சிப்பதா எனும் குழப்பத்துடனே, ஊடகங்களின் இணைய செயல்பாடுகள் அமைந்திருந்தன.*

*இந்த பின்னணியில் தான், 1997 ல் ஸ்லேஷ்டாட் அறிமுகமானது. ஸ்லேஷ்டாட் தொழில்நுட்ப செய்திகளை தெரிந்து கொள்ள வழி செய்ததோடு, பயனர்கள் செய்திகளை பகிர்ந்து கொள்ளவும் வழி செய்தது. இதை சாத்தியமாக்கும் விவாத களமாகவும் அமைந்தது. இவை அனைத்துமே அந்த கால கட்டத்தில் புதுமைகள்.*

*அதிலும் குறிப்பாக பயனர்களே செய்திகளை சமர்பிக்கலாம் என்பது நினைத்து கூட பார்க்க முடியாதது. செய்திகளை தேர்வு செய்து வெளியிடுவது என்பது ஆசிரியர் குழுவால் மட்டும் சிறப்பாக செய்யப்பட கூடியது என்று கருதப்பட்டு வந்த நிலையில், ஸ்லேஷ்டாட் இந்த தேர்வை பயனர்கள் கூட்டு முயற்சியால் மேற்கொள்ள முடியும் என உணர்த்தியது.*

*எந்த செய்தியை கவனிக்க வேண்டும் என்பதை பல காலமாக இதழியலில் இருந்தவர்களே தீர்மானித்து வந்தனர். அதுவே அவர்கள் கடமையாக இருந்தது. வெளியிடத்தக்க செய்தி என்பதற்கான அளவுகோள்களும், நெறிமுறைகளும் இருந்தன. ஒரு செய்திக்கான இடம், அதற்கான அளவு, அதை வெளியிடும் தன்மை என எல்லாவற்றையும் இதழாளர்களே தீர்மானித்தனர்.*

இது இதழாளர்கள் பணி என்பதால், பொதுவாக, இதற்கு எதிர் கருத்தும் இருக்கவில்லை.

ஆனால் ஸ்லேஷ்டாட் சமூகம் இதற்கு மாறாக செயல்பட்டது. தொழில்நுட்பம் தொடர்பாக கவனிக்க வேண்டிய செய்தி என தான் கருதுவதை பயனர்கள் அதில் சமர்பிக்க முடிந்தது. ஸ்லேஷ்டாட் குழுவால் ஏற்றுக்கொள்ளப்பட்டால், இந்த தகவல் முகப்பு பக்கத்தில் வெளியானது.

எல்லா வகையான தகவல்களும் ஸ்லேஷ்டாட்டில் சமர்பிக்கப்பட்டன. மரபான ஊடகங்களில் வெளியான செய்திகளும் பகிரப்பட்டன. அதே நேரத்தில், ஊடகங்களில் கவனம் பெறாத தகவல்களும் பகிரப்பட்டன. உள் வட்டங்களில் கசியும் தகவல்கள் போன்றவையும் சமர்பிக்கப்பட்டன. இவை ஏற்கப்பட்டு, உறுப்பினர்களால் தீவிர விவாதத்திற்கு உட்படுத்தப்பட்டால், அதுவே கவனத்தை ஈர்க்க போதுமானதாக இருந்தது.

பல நேரங்களில், ஸ்லேஷ்டாட்டில் அடையாளம் காணப்பட்ட செய்தியை, அதன் காரணமாகவே ஊடகங்கள் செய்தியாக வெளியிடும் நிலை உருவானது. ஒரு சில பத்திரிகையாளர்கள், ஸ்லேஷ்டாட்டில் தங்களுக்கான செய்தி பொறி சிக்கும் என்பதை உணர்ந்தே, அந்த தளத்தை பின் தொடர்வதை தங்கள் வேலையின் ஒரு பகுதியாக கொண்டிருந்தனர்.

ஸ்லேஷ்டாட்டில் விவாதிக்கப்பட்டது என்பதே ஒரு செய்திக்கான தகுதியாகவும் மாறியது.

ஆக, இதழியலுக்கு வெளியே ஒரு இதழியல் மையமாக ஸ்லேஷ்டாட் உருவானது.

இணையத்தில் பதிப்புக்கும் வசதியை எல்லோருக்கும் சாத்தியமாக்கிய வலைப்பதிவு எனும் கருத்தாக்கம் இன்னமும் அறிமுகமாகியிராத காலத்தில், சமூக ஊடகங்களாக உருவாக இருந்த சமூக வலைப்பின்னல் தளங்கள் எழுச்சி பெறாத காலத்தில், ஸ்லேஷ்டாட் இதை செய்தது என்றால் அதன் முக்கியத்துவத்தை எப்படி அளவிடுவது?

ஸ்லேஷ்டாட் வெறும் தொழில்நுட்ப சமூகமாக மட்டும் உருவாகவில்லை. அது இதழியலில் புதிய பாதையாகவும் அமைந்தது.

1999 ல் ‘வயர்டு’ இணைய இதழில் வெளியான கட்டுரை இதை கச்சிதமாக படம் பிடித்துக்காட்டுகிறது. இதழாளர்கள் பணியை காலாவதியாக்கும் சுழற்சியை கொண்ட ஒரு புயல் ஸ்லேஷ்டாட் வடிவில் வீசிக்கொண்டிருப்பதாக அந்த கட்டுரையின் துவக்கத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது.

ஓபன் சோர்ஸ் இதழியல் என கருதக்கூடியதன் துவக்கமாக ஸ்லேஷ்டாட் அமைகிறது என்றும் அந்தக் கட்டுரை தெரிவித்தது. ஆயிரக்கணக்கான வாசர்களின் கண் மற்றும் காதுகளை

அடைப்படையாக கொண்டு செயல்படும் ஒரு செய்தி சேவையாக ஸ்லேஷ்டாட் இருப்பதாகவும் விளக்கம் அளித்திருந்தது.

ஸ்லேஷ்டாட் விவாதம், பகுதியளவு வர்ணையாயகவும், பகுதியளவு பரிசீலனையாகவும் அமைந்து செய்திகளுக்கான ஊற்றை தீர்மானிக்கும் களமாகவும் விளங்குவதாக குறிப்பிட்டிருந்தது.

இந்த கட்டுரையில் கருத்து தெரிவித்திருந்த பத்திரிகையாளர்கள் ஸ்லேஷ்டாட்டின் செல்வாக்கை ஏற்றுக்கொண்டாலும், அது இதழியலுக்கு மாற்று என்பதை ஒப்புக்கொள்ளவில்லை. செய்தி வெளியீட்டிற்கான சில அம்சங்களை ஸ்லேஷ்டாட் கொண்டிருந்தாலும், அதன் செயல்பாடுகள் இதழியலாகி விடாது என்று அவர்களில் சிலர் திடமாக கூறியிருந்தனர்.

இதழியல் மீதான ஸ்லேஷ்டாட்டின் தாக்கத்தை குறிப்பிடும் போது, மற்றொரு முக்கிய சம்பத்தையும் நினைவில் கொள்ள வேண்டும். 1999 ம் ஆண்டு, ஜேன்ஸ் இண்டெலிஜன்ஸ் ரிவ்யூ இதழின் துணை ஆசிரியர் ஜோஜன் இங்லஸ் (Johan Ingles,) சைபர் தீவிரவாதம் தொடர்பாக வெளியாக இருந்த கட்டுரை தொடர்பாக ஸ்லேஷ்டாட் பயனர்கள் கருத்தை கேட்டிருந்தார். இந்த கட்டுரை தொடர்பாக பெறப்பட்ட பின்னூட்டங்களை பரிசீலித்த பிறகு, அவர் அந்த கட்டுரையை நிராகரித்து விட்டு, ஸ்லேஷ்டாட் பயனர்கள் தெரிவித்திருந்த கருத்துகள் அடிப்படையில் புதிய கட்டுரையை எழுதி வெளியிட்டார்.

இதனிடையே ஸ்லேஷ்டாட் செல்வாக்கு மேலும் அதிகரித்து வந்த நிலையில், 2006 ம் ஆண்டு பிரபல வர்த்தக இதழான பார்ட்டியூன், ஸ்லேஷ்டாட்டை இதழியலின் எதிர்காலம் என வர்ணித்திருந்தது. தொழில்நுட்ப ஆர்வலர்கள் மற்றும் புரோகிராமர்கள் மத்தியில் பிரபலமாக உள்ள ஸ்லேஷ்டாட்டின் அனைத்து உள்ளடக்கமும் பயனர்களால் சமர்பிக்கப்படுவதும், பயனர்களில் 25 சதவீதத்தினர் அதன் செய்திகள் குறித்து கருத்து தெரிவித்து விவாதிப்பதும் அதன் தனித்துவமான அம்சங்கள் என குறிப்பிடப்பட்டிருந்தது.

‘எல்லோரும் பங்கேற்புத்தன்மை பற்றி பெரிதாக பேசிக்கொண்டிருக்கின்றனர். எட்டு ஆண்டுகளாக நாங்கள் அதை தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்’ என இந்த க்கட்டுரையில் ஸ்லேஷ்டாட் தரப்பில் நிர்வாகி ஒருவர் கூறியிருந்தார்.

ஓபன் சோர்ஸ் இதழியலை ஸ்லேஷ்டாட் பிரதிபலிப்பதாகவும் இந்த கட்டுரை தெரிவிக்கிறது.

செய்தி கண்டறியப்பட்டு விவாதிக்கப்படும் முறையை ஸ்லேஷ்டாட் மாற்றிவிட்டது என்பதை இதழாளர்கள் அப்போதே உணர்ந்திருந்தால், சமூக ஊடகங்களின் எழுச்சியை சரியாக கையாண்டிருக்கலாம். அதைவிட முக்கியமாக, பயனர்களுடன் இணைந்து செய்தியை உருவாக்கும்

காலத்தை வந்தடைந்திருக்கிறோம் என்பதையும் புரிந்து கொண்டிருக்கலாம்.

செய்தி சேகரிப்பிலும், வெளியீட்டிலும் வாசகர்களுடன் இணைந்து செயல்படும் புதிய வகையான இதழியலுக்கான துவக்கப்புள்ளிகளில் ஒன்றாக ஸ்லேஷ்டாட் அமைவது அதன் சிறப்பாகும்.

*https://webcache.googleusercontent.com/search?q=cache:TSv$_S$hZNlokJ:https://www.wired.com/1999/08/slashdot-all-the-news-that-fits/+&cd=9&hl=en&ct=clnk&gl=in*

*https://money.cnn.com/2006/02/09/technology/fastforward_fortune/index.htm*

## 7. டிஜிட்டல் கர்ம பலன்

இணையதளம் மட்டும் அல்ல, இணைய சமூகமாகவும் இருப்பது தான் ஸ்லேஷ்டாட்டின் முக்கிய அம்சமாக கருதப்படுகிறது. ஒரு தளமாக ஸ்லேஷ்டாட் பார்வையாளர்களை கவர்ந்திழுப்பதோடு, அவர்களை தக்க வைத்துக்கொள்வதாகவும் இருக்கிறது. அதன் பார்வையாளர்களில் பலர் மீண்டும் மீண்டும் வருகை தருபவர்களாக இருப்பதோடு, அந்த தளம் தங்களுக்கானது என உணர்கின்றனர். தொழில்நுட்ப ஆர்வமும், தொடர்புடைய செய்திகளை பகிர்ந்து கொண்டு விவாதிக்கும் ஆர்வமுமே அவர்களை இணைக்கின்றனர்.

இவை எல்லாம் சேர்ந்தே ஸ்லேஷ்டாட்டை ஒரு இணைய சமுகமாக உருவாக்கியது. இத்தகைய சமூகத்தனை, இமெயில் குழுக்கள் அல்லது தகவல் பலகை காலத்திலேயே இணையத்தின் தன்மையாக இருந்தது தான். ஆனால், ஸ்லேஷ்டாட் இதை லட்சக்கணக்கான உறுப்பினர்களை கொண்ட தளத்தில் பெரிய அளவில் சாத்தியமாக்கியது.

ஸ்லேஷ்டாட்டின் சமூகம் இரண்டு விதங்களில் முக்கியமாக அமைகிறது. ஆர்வம் உள்ள அதிக பயனாளிகளை கொண்டிருப்பதால், அவர்களுக்கு பயனளிக்க கூடிய செய்திகள் தேடி கண்டெடுக்கப்பட்டு பகிரப்படுகின்றன. இரண்டாவதாக, இந்த செய்திகள் பயனர்களால் தீவிரமாக அலசி, ஆராயப்பட்டு விவாதிக்கப்படுவதால், பல கோணங்களில் அணுகி புதிய தகவல்களையும், புரிதலையும் பெற முடிகிறது.

பல செய்திகளுக்கு நூற்றுக்கணக்கான கருத்துகளை பின்னூட்ட வடிவில் பார்க்கலாம். பெரும்பாலான மற்ற தளங்களை இந்த அளவுக்கு கருத்து பரிமாற்றத்தை பார்க்க முடியாது. அவதூறான மற்றும் வீண் வம்பு நோக்கிலான கருத்துகள் உண்டு என்றாலும், பொதுவாக பார்க்கும் போது ஸ்லேஷ்டாட் விவாதம் பயனுள்ளதாகவே இருக்கும்.

ஸ்லேஷ்டாட்டை அடிப்படையாக கொண்டு இயங்கிய இந்த வலுவான சமூகமே அதன் செல்வாக்கிற்கான முக்கிய காரணமாக அமைகிறது.

ஸ்லேஷ்டாட் வளர்ச்சியைப்போலவே, அது ஒரு இணைய சமூகமாக வளர்ந்த விதமும் ஆச்சர்யமானது. ஸ்லேஷ்டாட் நிறுவனரான, மால்டா, துவக்கத்தில் செய்தி வெளியீட்டையும், தேர்வையும் தான் மட்டுமே மேற்கொண்டார். பின்னர் ஒத்த கருத்துள்ள நண்பர்களையும் சேர்த்துக்கொண்டார். ஆனால், தளம் வளர்ச்சி அடைந்த நிலையில், தளத்தை நிர்வகிப்பது சிக்கலானது.

இந்த கட்டத்தில், மால்டா உறுப்பினர்களின் உதவியை நாடினார். செய்திகளை பகிரும் பொறுப்பையும், கருத்துகளை நெறிபடுத்தும் பொறுப்பையும் உறுப்பினர்கள் பகிர்ந்து கொண்டனர். அதே நேரத்தில், பயனர்களும் வரவேற்கப்பட்டனர். உறுப்பினர் என்பது பிரத்யேக அந்தஸ்தாக கருதப்பட்டாலும், ஸ்லேஷ்டாட்டில் செய்திகளை வாசிக்கவோ, அவற்றை சமர்பிக்கவோ உறுப்பினராக இருக்க வேண்டும் என்பது கட்டாயம் இல்லை.

எந்த ஒரு பயனரும், பெயர் குறிப்பிடாமல் செய்திகளை சமர்பிக்கலாம். எந்த ஒரு இணைய சமூகத்திற்கும் இத்தகைய அநாமதேய தன்மை ஆபத்தானது. அநாமாதேய தன்மை தாக்குதலுக்கும் அவதூறுக்கும் வழி வகுக்கும் என்று அஞ்சப்படுகிறது. ஆனால், பல நேரங்களில் ரகசிய அல்லது உள்வட்ட தகவல்களை பகிர்ந்து கொள்ள இத்தகைய தன்மை அவசியம். ஸ்லேஷ்டாட் தளத்தில் பலரும் இப்படி அநாமதேயமாக தங்கள் துறை சார்ந்த உள் நிகழ்வுகளை பகிர்ந்து கொண்டுள்ளனர். வேறு எங்கும் தெரிந்து கொள்ள வழியில்லாத தகவல்களாக அவை அமைந்ததுள்ளன.

இந்த காரணங்களுக்காக ஸ்லேஷ்டாட் அனாமதேய தன்மையை அனுமதித்தாலும், தீவிர ஆர்வம் உள்ளவர்களை உறுப்பினராக ஊக்குவித்தது. பயனர்கள் பகிரும் தகவல்கள் பெயரில்லாமலேயே வெளியாகும். ஆனால் உறுப்பினராக இணைந்தால், அவர்கள் பெயர் மற்றும் அறிமுக குறிப்பு இருக்கும். இது ஒரு அங்கீகாரம் போன்றது. ஸ்லேஷ்டாட் பயனர்களில் பெரும்பாலனோர் இந்த அங்கீகாரத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டனர். அங்கீகாரம் பொறுப்புணர்வையும் அளிக்கிறது.

மேலும், பின்னூட்ட கருத்துகளை நெறி படுத்தும் பொறுப்பும் உறுப்பினர்களிடம் அளிக்கப்பட்டது. ஆனால் இது மேலாண்மை அதிகாரமாக அல்லது குறிப்பிட்ட பிரிவுக்கான அதிகாரமாக மாறிவிடாமல், மிகுந்த ஜனநாயக தன்மையுடன் அமைந்திருந்தன. இந்த தன்மையை ஸ்லேஷ்டாட் வளர்த்தெடுத்த விதம் பாராட்டுக்குறியதாக இருக்கிறது.

ஸ்லேஷ்டாட்டில், செய்திகள் தொடர்பான கருத்துகள் கூடுதல் பயன் அளிப்பவையாக அமைவதால், அவற்றை நெறிப்படுத்த ஏற்ற செயல்முறை கொண்டு வரப்பட்டது. முதல் கட்டமாக, பின்னூட்ட கருத்துக்கள், மதிப்பிடப்படும். ஒவ்வொரு கருத்திற்கும் அதன் பயன்பாட்டு தன்மைக்கேற்ப 1 முதல் 5 வரையான மதிப்பெண் வழங்கப்படும். அதிக மதிப்பெண் பெரும் கருத்து முன்னிலை பெறும். மோசமான கருத்துகள் இந்த முறையில் பின்னுக்குத்தள்ளப்படும்.

இப்படி கருத்துகளை மதிப்பிடுபவர்கள் நெறியாளர்களாக கருதப்பட்டனர். ஆனால், நெறியாளர்கள் தங்கள் இஷ்டம் போல மதிப்பிட முடியாது. அவர்கள் கைவசம் உள்ள மதிப்பெண்களை வழங்கிவிட்டால், அதற்கு மேல் மதிப்பிட முடியாது. அதன் பிறகு அடுத்த

சுழற்சியில் தான் அவர்கள் மீண்டும் மதிப்பெண் வழங்க முடியும். அதோடு, நெறியாளர்கள் வழங்கும் மதிப்பெண்கள், அடுத்த கட்ட நெறியாளர்கள் மதிப்பிடுவார்கள். எனவே, நெறியாளர்கள் தங்கள் பொறுப்புணர்ந்து செயல்படும் நிலை இருந்தது.

ஸ்லேஷ்டாட் உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் அவர்கள் செயல்பாடு அடிப்படையில் கர்ம புள்ளிகளும் அளிக்கப்பட்டன. இது அவர்கள் அறிமுக பக்கத்தில் இடம் பெற்றிருக்கும். மதிப்பெண் அளிக்கும் விதம், செய்திகளை பகிர்ந்து கொள்ளும் தன்மை ஆகியவை அடிப்படையில் இந்த கர்ம புள்ளி கணக்கிட்டு வழங்கப்பட்டது. அதிக கர்ம புள்ளிகள் இருந்தால் நெறியாளராகும் வாய்ப்புகள் அதிகம். மேலும் அதிக கர்ம புள்ளிகள் கொண்டவர்கள் செய்திகளை சமர்பிக்கும் போது, பூஜ்ஜியம் மதிப்பெண்ணுக்கு பதிலாக 1 மதிப்பெண்ணுடன் துவங்கலாம்.

இப்படி உறுப்பினர் செயல்பாடு அடிப்படையில் தீர்மானிக்கப்பட்ட கர்ம புள்ளிகள், நல்லவிதமான அணுகுமுறையை ஊக்குவிப்பதாக அமைந்தது. ஸ்லேஷ்டாட் சமூகம் தன்னைத்தானே கண்காணித்துக்கொள்ள வழி செய்யப்பட்டதே, அதை மிகச்சிறந்த விவாத தளமாக உருவாக்கியது.

பி.கு: இணைய ஏல தளமான இபேவிலும், உறுப்பினர்கள் மத்தியில் நம்பிக்கை மற்றும் நல்லெண்ண சூழலை உருவாக்க கர்ம பலன் புள்ளிகள் முறை பின்பற்றப்பட்டது. இபேவில் ஒருவர் ஏலத்தில் பங்கேற்று ஏமாற்றினால் உறுப்பினர்கள் அது குறித்து கருத்து தெரிவித்து அவர்களுக்கான கர்ம புள்ளிகளை குறைப்பார்கள். ஏல நடவடிக்கையில் தொடர வேண்டும் எனில், நம்பகமானவராக இருப்பது அவசியம்.

*https://books.google.co.in/books?id=0ihuPBYo4p4C&pg=PA127&lpg=PA127&dq=Karma+level%2Bslashdot&source=bl&ots=jgd fyopbbqAhWbWX0KHZL9CFcQ6AEwC3oECAYQAQ#v=onepage&q=Karma%20level%2Bslashdot&f=false*

*https://insights.dice.com/2012/10/01/history-of-slashdot/*

## 8. ஒரு தலையங்கம்

ஸ்லேஷ்டாட் பயனர்கள் சார்ந்த தளம் என்றாலும், அது ஆசிரியர் குழு அமைப்பையும் கொண்டிருந்தது. மரபான இதழியல் ஆசிரியர் குழுவாக இதை கருத முடியாவிட்டாலும், பயனர்கள் சமர்பிக்கும் தகவல்களை பரிசீலித்து, அங்கீகரிக்கும் பொறுப்பு இதன் வசம் இருந்தது. நிறுவனர் மால்டா தான், இக்குழுவின் தலைமை ஆசிரியராக இருந்தார். இதழியல் அனுபவம் இல்லாத போதிலும், தொழில்நுட்ப ஆர்வம் வழிகாட்ட தனது குழுவையை அவர் வழிநடத்தினார்.

ஸ்லேஷ்டாட்டின் இன்னொரு தனித்துவமான அம்சம், அது தலையங்கம் பகுதியையும் கொண்டிருந்தது. 1998 ம் ஆண்டு ஜனவரி மாதம், ஸ்லேஷ்டாட் தளத்தின் முதல் தலையங்கத்தை மால்டா எழுதினார். இனி வரக்கூடிய பல ஸ்லேஷ்டாட் தலையங்களில் ஒன்றாக இது இருக்கும் என நம்புகிறேன் எனும் குறிப்பிட்டிருந்த மால்டா, செய்திகள் தவிர, புதிய எண்ணங்கள் அல்லது பிற தகவல்களை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புவதாக தெரிவித்திருந்தார்.

எளிமையான தீர்வுகள் எனும் தலைப்பில் இந்த தலையங்கத்தை எழுதியிருந்தார்.

நெட்ஸ்கேப் நிறுவனத்தின் தடுமாற்றம் மற்றும் எதிர்கால பாதைக்கான ஆலோசனை தொடர்பாக தலையங்கம் அமைந்திருந்தது. முன்னோடி பிரவுசரான நெட்ஸ்கேப், வேகமாக சந்தையை இழந்து, நஷ்டத்தை சந்தித்து வரும் நிலையில், அது தனது நிரலை பொதுவில் வைத்து ஓபன் சோர்ஸ் பாதையை தேர்வு செய்ய வேண்டும் என மால்டா அதில் வாதிட்டிருந்தார்.

மால்டாவின் தலையங்கம் வெளியான சில நாட்களில், நெட்ஸ்கேப் நிறுவனம் தரப்பில், அதன் நிரல் பொதுவெளியில் வெளியிடப்படுவதற்கான அறிவிப்பு வெளியானது.

மால்டா தலையங்கத்தால் தான் நெட்ஸ்கேப் ஓபன் சோர்ஸ் பாதையை தேர்வு செய்ததாக கூற முடியாது. மால்டா அப்படி மார் தட்டிக்கொள்ளவில்லை. நெட்ஸ்கேப் தரப்பிலும் அவ்வாறு கூறப்படவில்லை. நிச்சயம் நெட்ஸ்கேப் தரப்பில் இத்தகைய விவாதம் நடைபெற்றுக்கொண்டிருந்திருக்க வேண்டும். அதன் விளைவாகவே இவ்விதமாக தீர்மானிக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஆனால், மால்டாவின் தலையங்கத்தை தீர்கதரிசனமானது என்றே சொல்ல வேண்டும். அது மட்டும் அல்லாமல், இந்த கருத்து பொதுவெளியில் வைக்கப்பட்டு விவாதிக்கப்பட்டது, நெட்ஸ்கேப் முடிவுக்கு வலு சேர்த்திருக்க வேண்டும் என கருதலாம்.

ஒரு வேளை, மால்டா இப்படி ஒரு தலையங்கத்தை எழுதாமல் இருந்திருந்தால் என்ன ஆகியிருக்கும் என்றுத் தெரியவில்லை. அப்போதும் கூட, நெட்ஸ்கேப் ஓபன் சோர்ஸ் பாதைக்கு வந்திருக்கலாம். வராமலும் போயிருக்கலாம்.

வலையின் முதல் வெகுஜன பிரவுசரான, நெட்ஸ்கேப், ஓபன் சோர்ஸ் பாதைக்கு வந்து, மொசில்லா அறக்கட்டளையின் கீழ் பயர்பாக்ஸ் பிரவுசராக உருவானது இணைய உலகின் முக்கிய நிகழ்வாகவே அமைகிறது.

இந்த நிகழ்வுக்கு ஸ்லேஷ்டாட் தான் காரணம் என அறுதியிட்டு கூற முடியாவிட்டாலும், அதற்கு சிறு பங்கு இருப்பதை மறுப்பதற்கில்லை.

ஸ்லேஷ்டாட்டின் தலையங்கங்கள் மற்றும் அந்த களத்தில் வல்லுனர்களும், ஏன் பத்திரிகையாளர்களும் எழுதிய கட்டுரைகளும் அவை உண்டாக்கிய விவாதமும் இணைய உலகின் சிந்தனை போக்கின் மீது தாக்கம் செலுத்துதாக அமைகின்றன.

*https://tech.slashdot.org/story/98/01/12/085000/simple-solutions-slashdot-editorial*

## 9. ஸ்லேஷ்டாட்டிற்கு பின்…

ஸ்லேஷ்டாட் தளம் இப்போது எப்படி இருக்கிறது என்பது முக்கியம் அல்ல என நினைக்கிறேன். ஏனெனில் இணைய உலகின் அதன் சுவடு ஏற்கனவே ஆழ பதிந்து விட்டது. ஸ்லேஷ்டாட் தளம் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்கிறது ஆனால், அது பழைய செல்வாக்குடன் இல்லை என சொல்லப்படக்கூடியதை எல்லாம் மீறி, ஸ்லேஷ்டாட்டின் தாக்கம் தொடர்கிறது என்றே சொல்ல வேண்டும்.

ஸ்லேஷ்டாட் புத்தாயிரம் ஆண்டுக்கு முன் துவங்கப்பட்ட தளமாக இருக்கலாம். பயனர் பங்கேற்பு உள்ளிட்ட புதுயுக அம்சங்களை கொண்ட தளங்கள் வலை 2.0 தன்மை கொண்டவையாக குறிப்பிடப்படும் போக்கு, 2004 ம் ஆண்டுக்கு பிறகு உருவானாலும், இதன் ஆதார அம்சமான பயனர் பங்கேற்பை ஸ்லேஷ்டாட் கொண்டிருந்ததை வியப்புடனேயே திரும்பி பார்க்க வேண்டியிருக்கிறது.

2005 ம் ஆண்டு அறிமுகமான டிக் (https://digg.com/) இணையதளம், சமூக செய்தி தளங்கள் வரிசையில் அடுத்த புரட்சியாக அமைந்தது. செய்திகளை யார் வேண்டுமானாலும் சமர்பிக்கலாம், அந்த செய்திகளுக்கான இணைப்புகள் சக வாசகர்கள் அதற்கு அளிக்கும் வாக்குகள் அடிப்படையில் முகப்பு பக்கத்தில் முன்னிலை பெறும் எனும் விதமாக செயல்பட்ட டிக், அறிமுகமான காலத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. ஸ்லேஷ்டாட் தொழில்நுட்ப செய்திகளுக்கு செய்தத்தை டிக், பொதுவான செய்திக்கு செய்ததாக கருதலாம்.

ஸ்லேஷ்டாட்டில் இருந்து முக்கிய வேறுபாடாக, ஆசிரியர் குழு இல்லாமல், எல்லாவற்றையும் பயனர் சமூகமே தீர்மானிப்பதாக டிக் அமைந்திருந்தது. ஆனால் ஸ்லேஷ்டாட் ஏற்படுத்தியது போலவே டிக்கும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி, இணையதளங்களுக்கான போக்குவரத்தை அதிகரித்தது. இதன் காரணமாக, இணைய உலகில் எந்த செய்தியை கவனிக்க வேண்டும் என்பதை வாசகர்களே கூட்டாக தீர்மானிக்கும் போக்கு உருவானது. நாளிதழ்களும், ஊடகங்களும் டிக் விளைவை பெற விரும்பி, எங்கள் செய்திகளை டிக் செய்யுங்கள் என வேண்டுகோள் விடுக்கும் நிலை ஏற்பட்டது. டிக் செய்வது என்றால் டிக் தளத்தில் பகிர்வது. இதற்கான பிரதேக பட்டன்களும் கூட உருவாக்கப்பட்டன.

இந்த கால கட்டத்தில் ஸ்லேஷ்டாட் மற்றும் டிக் ஒப்பீடு செய்யும் நிலையும் இருந்தது. டிக் செல்வாக்கிற்கு முன் ஸ்லேஷ்டாட் மங்கி விட்டதாகவும் பேச்சு இருந்தது. சில ஆண்டுகளில் டிக் தளமே இதே போல நிலைக்கு உள்ளானது வேறு விஷயம்.

ஆனால், பயனர்கள் செய்திகளை பகிர்வது, விவாதிப்பது எனும் புதிய போக்கை டிக் அறிமுகம் செய்து வைத்தது. டிக் அறிமுகமான சில மாதங்களிலேயே இணையத்தின் முகப்பு பக்கம் எனும் முழக்கத்துடன் ரெட்டிட் தளம் அறிமுகமானது தற்செயல் என நினைக்க வேண்டியதில்லை.

பயனர்கள் இணைப்புகளை சமர்பித்து, அவற்றை மையமாக கொண்டு விவாதிக்க வழி செய்த சமூக தளமான ரெட்டிட் பல்வேறு தலைப்புகளுக்கான துணை குழுக்கள் ( சப் ரெட்டிட்) மற்றும் வாசகர்கள் பிரபலங்களை கேள்வி கேட்கும் ஆஸ்க் மீ எனிதிங் உள்ளிட்ட வசதிகளை அறிமுகம் செய்து பிரபலமானது.

டிக், ரெட்டிட் பாணி சமூக தளங்களுக்கு எல்லாம் ஸ்லேஷ்டாட் ஆரம்ப புள்ளியாக கருதலாம். பின்னர் உருவான ஹேக்கர் நியூஸ் தளத்தையும் கூட இன்னொரு ஸ்லேஷ்டாட் என்றே கருதலாம்.

அது மட்டும் அல்ல, ஸ்லேஷ்டாட் அறிமுகமான காலத்திலேயே உதயமான பார்க்.காம் (https://www.fark.com/ ) சமூக தளத்தையும் மறந்துவிடக்கூடாது. இடைப்பட்ட காலத்தில் மேலும் பல தளங்கள் பயனர் பங்களிப்பு அம்சத்திற்கு முக்கியத்துவம் அளித்து செயல்பட்டன.

இணைய யுகத்தில் வாசகர் என்பவர் செய்திகளை நுகர்பவர் மட்டும் அல்ல, செய்திகளை பகிர்வதிலும், உருவாக்குவதிலும், விவாதிப்பதிலும் அவருக்கு பங்கு இருக்கிறது என்பதை உணர்த்திய முன்னோடி தளங்களில் ஒன்றாக ஸ்லேஷ்டாட் விளங்குகிறது.

## நூலாசிரியர் குறிப்பு

*இதழியல் துறையில் 25 ஆண்டுகளுக்கு மேல் அனுபவம் உள்ள சைபர்சிம்மன் ( இரா.நரசிம்மன்), அலுவல் சார்ந்த செய்தி சேகரிப்பு தவிர, இணையம், தொழில்நுட்பம் தொடர்பாக தமிழில் தொடர்ந்து எழுதி வருபவர். சுதேசமித்ரன் நாளிதழில் துவங்கி, மாலைச்சுடர், இந்தியா டுடே தமிழ் உள்ளிட்ட ஊடங்களில் பணியாற்றி தற்போது சுயேட்சை பத்திரிகையாளராக இயங்கி வருபவர், முன்னணி ஊடகங்களில் இணையம், தொழில்நுட்பம் சார்ந்து கட்டுரைகளையும், பத்திகளையும் எழுதி வருகிறார். சைபர்சிம்மன் எனும் பெயரில் பத்தாண்டுகளுக்கும் மேலாக வலைப்பதிவு செய்து வருபவர், தற்போது இணைய மலர் எனும் மின்மடலையும் நடத்தி வருகிறார். இணையத்தின் ஆற்றல் மீதும், அதன் ஜனநாயக தன்மை குறித்தும் தீவிர நம்பிக்கை கொண்டவர். நவீன தொழில்நுட்பத்தின் போக்குகளையும், பாய்ச்சல்களையும், அடிப்படை அம்சங்களையும் தமிழில் பதிவு செய்வதில் ஆர்வம் உள்ளவர். செயற்கை நுண்ணறிவு அடிப்படை அம்சங்களை விவரிக்கும் வகையில் தினமலர் பட்டம் மாணவர் பதிப்புல் எழுதிய தொடர், எதிர்கால தொழில்நுட்பங்களை விவரிக்கும் வகையில் புதிய தலைமுறை கல்வியில் எழுதிய தொடர் மற்றும் தமிழ் இந்து இணைய பதிப்பில் எழுதிய தேடியந்திரங்கள் தொடர்பான தொடர் ஆகியவை குறிப்பிடத்தக்க தொடர்கள்.*

*டிஜிட்டல் இதழியல் கவுரவ விரிவுரையாளராகவும் பணியாற்றி வருபவர், இணையத்தால் இணைவோம், நெட்சத்திரங்கள், டிஜிட்டல் பணம், நம்காலத்து நாயகர்கள் மற்றும் மொபைல் ஜர்னலிசம் ஆகிய புத்தகங்களை எழுதியுள்ளார்.*

*இணைய வரலாற்றில் மைல்கல்லாகவும், இதழியல் மீது இணையத்தின் தாக்கத்திற்கான அடையாளமாகவும் திகழும் ஸ்லேஷ்டாட் சமூக செய்தி தளம் பற்றி எழுதியுள்ள அறிமுக நூல் இது.*

-

*ஆசிரியர் இணையதளம்: http://cybersimman.com/*

*இணைய மலர் மின்மடல்: https://cybersimman.substack.com/*

*தொடர்புக்கு: enarasimhan@gmail.com- 96770 58746*

## FREETAMILEBOOKS.COM

### *மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:*

*மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.*

### *ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:*

*ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.*

### *தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:*

*தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.*

*சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.*

### *சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?*

*அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.*

*சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.*

*நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.*

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் *Creative Commons* எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது *"Creative Commons"* எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் *"All Rights Reserved"* எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் *"All Rights Reserved"* என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை *"Creative Commons"* உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக

உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

***FREETAMILEBOOKS.COM***

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

*PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT*

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

*யாருமில்லை.*

*இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.*

*மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.*

***இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?***

*ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.*

*ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.*

*அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.*

*தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.*

***நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?***

*உள்ளது.*

*பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.*

1. *http://www.vinavu.com*
2. *http://www.badriseshadri.in*
3. *http://maattru.com*
4. *http://kaniyam.com*
5. *http://blog.ravidreams.net*

***எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?***

*இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.*

*உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].*

*தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.*

*இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.*

*இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.*

*இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.*

*எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.*

*இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.*

*http://creativecommons.org/licenses/*

*நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.*

*e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM*

*FB : https://www.facebook.com/FreeTamilEbooks*

*G plus: https://plus.google.com/communities/108817760492177970948*

*நன்றி.*

*மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.*

*முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.*

*கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREE-TAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.*

***ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?***

*அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.*

*ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.*

*அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.*

***மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?***

*ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.*

*நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.*

***தவிர்க்க வேண்டியவைகள் யாவை?***

*இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.*

***எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?***

*நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.*

- *EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM*
- *Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks*
- *Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948*

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – *http://freetamilebooks.com/meet-the-team/*

***SUPPORTED BY***

கணியம் அறக்கட்டளை- *http://kaniyam.com/foundation*

## கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – *Vision***

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – *Mission***

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**தற்போதைய செயல்கள்**

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

**கட்டற்ற மென்பொருட்கள்**

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition

- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – *Send2Kindle*
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- *FreeTamilEbooks* – ஆன்டிராய்டு செயலி
- *FreeTamilEbooks* – ஐஓஎஸ் செயலி
- *WikisourceEbooksReport*இந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- *FreeTamilEbooks.com – Download counter* மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் *NLP* க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி

- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக

வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

## நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

***Kaniyam Foundation***

***Account Number : 606 1010 100 502 79***

***Union Bank Of India***

***West Tambaram, Chennai***

***IFSC – UBIN0560618***

***Account Type : Current Account***

***UPI செயலிகளுக்கான QR Code***

BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**

**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

*குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.*

*Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.*